[24th January 1961

கொண்டிருக்கிறது. இதுபோல் இன்னும் பல வட்டார வளர்ச்சிப் பகுதியிலே தொடங்கப்பட இருக்கிறது. இதைப்பற்றிய விவரங்கள் முன்பே கொடுத்திருக்கிறேன்.

SRI V. K. RAMASWAMY MUDALIYAR : After the scheme has been finalised, will the Government consider the desirability of placing a copy of the scheme on the table of the House?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Yes, Sir. This will take a year and this can be considered when we discuss the Budget for the next year.

**SRI P. G. MANICKAM :** ஸார், 3-வது ஐந்தாண்டுத் திட்ட காலத்திலே கோயம்புத்தூர் ஜில்லாவிலே, தாளவாடி மலைப் பிரதேசத்திலே இவ்வாறு காட்டுப் பண்ணை தொடங்குவதற்கு அரசாங்கத்தில் ஏதாவது பரிசிலனை நடத்தப்பட்டு வருகிறதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** இப்போது எடுத்துக் கொள்ளப்பட்டிருப்பது பரிட்சார்த்த திட்டம்தான். 3-வது ஐந்தாண்டுத் திட்டக் காலத்திலே பல இடங்களில், பல வட்டார வளர்ச்சித் திட்டங்களிலே இத்திட்டத்தை எடுத்துக்கொள்ளப் படும். அப்போது வசதியாக இருக்குமானால், அதுபற்றி அப்போது கவனிக்கப்படும்.

*Home Minister's tour*

*** 153 Q.—SRI A. VEDARATHNAM :** கனம் உள்விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) ரஷ்ய நாட்டிற்கு கனம் அமைச்சரவர்கள் விவசாய ஆராய்ச்சிப் பிராயணம் செய்துவந்ததின் மூலம் இந்த நாட்டு விவசாயத்துறையில் என்னென்ன அபிவிருத்தி செய்யப்படும் ?

(இ) அவற்றை அமுலுக்குக் கொண்டுவர ஏதேனும் திட்டமிடப்பட்டிருந்தால் அதன் விவரமென்ன ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : (அ) & (இ) The Minister has been very much impressed with the Scientific Research and its application to the land in the Soviet Union, and Government will devote larger attention to Scientific Research and extension work in the matter of agricultural development.

**SRI A. VEDARATHNAM :** அமைச்சர் அவர்கள் ரஷ்ய நாட்டுச் சுற்றுப் பிரயாணத்தின் போது, இந்த நாட்டிற்குப் பொருத்தமான விவசாய முறை ஏதாவது அங்கே அனுஷ்டிக்கப் பட்டது அவர்களுக்குப் புலப்பட்டதா ? அப்படியிருந்தால், அதை இங்கே அனுஷ்டிப்பதற்கு ஏதாவது முயற்சி எடுத்துக்கொள்ளப் பட்டிருக்கிறதா ?

**THE HON. SRI M. BHAKTAVATSALAM :** நான் என் விடையிலேயே அங்கு விஞ்ஞான ஆராய்ச்சியில் ஈடுபட்டு, அந்த ஆராய்ச்சிகள் மேலும் நிலத்திற்கு விஸ்தரிக்கப்படுகின்றன என்று குறிப்பிட்டேன். ஆகவே அதை இன்னும் தீவிரமாக நடத்த வேண்டுமென்பது இப்போது எனக்குப் புலப்படுகிறது.

24th January 1961]

SRI K. VINAYAKAM : On the whole are the agricultural conditions obtaining in Russia any better than ours excepting the technical backwardness that is found in our country or the yield from land is any better than what is obtaining in our country?

THE HON SRI M BHAKTAVATSALAM : Land is the same but everything depends on the application of the results of scientific research.

*Single teacher schools*

* 154 *Q*.—**SRI S. M. ANNAMALAI :** *கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—*

*(அ) 1960-ல் வடாற்காடு மாவட்டம் போளூர் தாலுகாவில் எத்தனை ஓராசிரியர் பள்ளிகள் திறக்கப்பட்டன ?*

*(இ) படவேடு, மதுரா, தேவனூங்குளம், ஜவ்வாது மலையிலுள்ள கானமலை கிராமங்களில் பள்ளிகள் திறக்கும் உத்தேசம் உண்டா ?*

THE HON. SRI C. SUBRAMANIAM : (*a*) Four

(*b*) A single teacher school has been ordered to be opened at Devanankulam. At present there is no proposal to open a school at Kanamalai.

**SRI S. M. ANNAMALAI :** *சார், தேவனூங்குளத்தில் ஓராசிரியர் பள்ளி ஆரம்பிக்க வேண்டுமென்று* **D.E.O** *முதற்கொண்டு சிபார்சு செய்திருந்தார்கள். அப்படி செய்யப்பட்டும், அங்குள்ள ரீஜனல் இன்ஸ்பெக்டர் பள்ளிக்கூடம் ஆரம்பிக்க வேண்டாமென்று உத்திரவு போட்டிருக்கிறார்கள். தவிர, அதற்குப் பதில் ஓர் ஆரம்பப் பள்ளியை இப்போது சாமந்திபுரத்தில் ஆரம்பித்திருக்கிறார்கள். இதை அமைச்சர் அவர்கள் அங்குள்ள ரிக்கார்டுகளை வரவழைத்து இரண்டு அதிகாரிகளுக்கும் உள்ள கருத்து வேறுபாட்டை அறிந்து, நியாயமான இடத்தில் பள்ளியை ஆரம்பிக்க உத்தரவுபோட முன்வருவார்களா என்று கேட்கிறேன்.*

**THE HON. SRI C. SUBRAMANIAM :** *இங்கு இருக்கக்கூடிய தகவலிலே, இம்மாதிரியான தகராறு எதுவும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை. அப்படி எதாவது இருப்பின், அங்கத்தினர் அவர்கள் குறித்துக் கொடுத்தால், அதுபற்றி பரிசிலனை செய்கிறேன்.*

*Schools (Javadu Hills)*

* 155 *Q*.—**SRI S. M. ANNAMALAI :** *கனம் நிதி அமைச்சர் அவர்கள் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—*

*போளூர் தாலுகா ஜவ்வாது மலையில் எத்தனை ஆரம்ப உயர்தரப் பாடசாலைகள் உள்ளன ?*

THE HON. SRI C. SUBRAMANIAM : **There are no higher** elementary schools in the Javadu Hills